தோன்றுனுய் வேதாந்தப்பொருளாய்த் தனியே வெளிப்பட்டுத் தோன்றுவன், அவனெக்காலமுமுள்ளான். பின்னிரண்டடிக்கு-(இங்ஙனமுளனுயினும்) அவ்வேதநீதியாகிய கருமஞான முறைப்படியாராய்ந்து சிந்திப்பாரிதயகமலத்து விளங்கித் தோன்றுவன், (இவ்வியல்பையெல்லாம்) இசையுடைய அவ்வேத நூலாகிய கண்ணுடியில் (செவியாகிய கண்ணால்) அறிந்து நின்றேனென்றவாறு.

வேத மிதுவே பிரமமெனச் சுட்டிக்காட்டப் பெறுமையால் அதனுட் புகுந்திலனென்றும், வேதாந்தப்பொருளா யிருத்தலில் வேறே வெளிப்படுமென்றுங் கூறியவாறுணர்க. கீதம் என்பது ஆகுபெயராய் வேதநூலை யுணர்த்திநின்றது. (கூகூ)

மண்ணிற்கலங்கியநீர்போன்மனிதர்க
ளெண்ணிற்கலங்கியிறைவனிவனென
ருண்ணிற்குளத்தின்முகந்தொருபால்வைத்துத்
தெண்ணிற்படுத்தச்சிவனவனுமே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு—நிலத்தியல்பாற் றிரிந்த நீர்போல மாயாசம்பந்தத்தா லெண்ணத்திற் கலக்கமுற்று (உண்மை விளங்காமையால்) இறைவ னிவனென் றறியமாட்டார். பின்னிரண்டடிக்கு - உள்ளேநிற்கு முளமாகிய இதயகமலத்தி லொரு பாலாகிய பொருளை முகந்துவைத்துக் கேட்டுச் சிந்தித்தபடியே தெளிவு நிற்றல்செய்ய அவனை நிட்டைகூடிச் சிவனுயிருப்பனென்றவாறு.

மண்ணால் நீர் திரியுமென்றதனை "நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகும்" எனக்கூறிய திருக்குறளிற்காண்க. பால் - என்பது இயல்பு; "பால்புடை யியல்பு திக்குப் பகுத்தல்பா லென்னு மைம்பேர்" என நிகண்டிலுங் கூறுதல்காண்க. முகத்தல் - ஈண் டபேதபாவனையைக் குறித்து நின்றது. (க௦௦)

முற்றிற்று.



உ

# பிழைதிருத்தம்.

திருமந்திர நூறுபாட்டுக்குரையின் முகவுரையிலிருந்து தொடுத்து ௪, ௫, ௬, ௭, ௮-ஆவது பக்கங்களில் ௨, ௩, ௪, ௫, ௬, எனப் பதிக்கப்பட்டிருக்கிற பக்க எண்களை முறையே ௪, ௫, ௬, ௭, ௮, எனவும், கடைசிப் பக்கத்தின் எண்ணை ௬௮ எனவும் திருத்திக் கொள்க.